*Ta<u>n</u>avaiciya ū<u>l</u>iya<u>n</u>*

*Malar 2, ita<u>l</u> 53*

*September 08, 1922*

Record no. 148

சிவமயம்

தந்திவிலாசம்— "Oolian"   Regd. No. M. 1509   "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையு முப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் உ. காரைக்குடி துந்துபிஞு ஆவணிமீ உ௩உ (அ—கூ—௧௯உஉ) இதழ் ௫௧

## ஏற்ப திகழ்ச்சி.

"ஏற்ப திகழ்ச்சி" என்பது இரப்பது இழிவு எனப்பொருள்படும். இரப்பது இழிவு என்பதை எல்லா அறநூல்களும வற்புறுத்திக் கூறுகின்றன. ஏற்பதனுலுண்டாகும் இகழ்ச்சியை அனுபவத்திநும் காண்கின்றோம். இன்றும் கண் கூடாக நாம்கண்டுவரும் இரப்பவர்களின் பரிதபிக்கத்தகுந்த நிலையை "குசேலோபாக்கியானம்" என்ற நூலில், வரும் இரண்டு செய்யுட்களால் நன்ருக விளக்குகின்றூர்.

"பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரன் முகத்திற்கூட்டிச், சொல்லெல்லாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி, மல்லெலா மகல வோட்டி மானமென்பதனை வீட்டி, யில்லெலா மிரந்த லந்தோ விழி விழி வெந்த ஞான்றும்."

"தெறு நிரப்புளோர் வாழ்ந்திடு செல்வர்பாற் செல்வரேன் மதயார்கண், மறுவுறுத்தவமானமு மியற்றவர் மானமுள்ளவராயிற்; குறுதமவ்வவ மானத்தாலுயிர் விடுகொள்கையிற் றலைநிற்பார், நறமலர்க்குழா லாதலா லவரிடை நண்ணன்றென வெண்ணல்."

இரண்டடியினும் நாலடியினும் இது பற்றிப் பல பாக்கள் முழக்கப்பட்டிருக்கின்றன. ஏற்பதிகழ்ச்சி என்னும் இவ்வரிய சொற்றொடர்க்குச் சான்ருக நமது பண்டைப் பெரியார்கள் இயற்றிய அரும் பெரும் பாக்கள் பற்பலவுள. அவைகளுள் முக்கியமானவற்றை மட்டினும் ஈண்டுத்தரினும் கட்டுரை விரிந்து விடும். வேண்டுமிடத்துச் சிற்சில வரைவாம். "கரவா துவந்தீயுங் கண்ணன்னூர் கண்ணு, மிரவாமை கோடியுறும்" என்பது குறள். "உள்ளதை ஒளியாது மகிழ்ச்சியோடு ஈகின்ற கண்ணையொத்த அன்பரிடத்தினும்,இரவா திருக்கின்ற தன்மை கோடிபெறும்" என்பது இதன்பொருள்; இதே கருத்துப்பட "கரவாத திண்ணன்பிற் கண்ணன்னூர் கண்ணும் இரவாது வாழ்வதாம் வாழ்க்கை" என நாலடி கூறுகின்றது. மற்றும், மறுமையையும் இம்மையையும் ஆய்ந்து ஒருவன் பேறடைய வேண்டுமாயின் கொடுத்தல் வேண்டும்; ஒருகால் வறுமையினுலே கொடுக்கமுடியாதவனுக விருப்பானுனல் அவன்யாசிக்குந் தொழில் செய்யாதிருப்பின் கொடுத்தலைக்காட்டினும் இரண்டு பங்கு அதிகம். என்பதை வரும் நாலடி விளக்குகின்றது.

"மறுமையுமிம்மையு நோக்கியொருவற்கு, உறுமாறு இயைவ கொடுத்தல்—வறுமையா, லீதலிசையா தெனினு மிரவாமை, யீதலிரட்டியுறும்."

வள்ளுவர், இரத்தல்என்ற இதனை எவ்வளவு இழிவாகக் கூறியிருக்கின்றூரென்பதை "இரவச்சம்" என்ற அதிகாரத்தைப்பார்த்தால் பரக்கக்காணலாம். "ஆவிற்கு நீரென்றிரப்பினு நாவிற்கு, இரவினி னிவந்ததில்" ஒரு பசுவுக்கு நீர்வேண்டுமென்று இரந்து கேட்பினும் அவ்விரவைப்போல நாவுக்கு அருவருப்புப்பிறிதொன்றில்லை என்ருல் இரவு எத்தன்மைத்து? இந்துக்களெல்லாம் தேவதைகள் வசிப்பதற்கிடமென எண்ணிப்பூசனைபுரியும் பசுவுக்கு நீர் வேண்டுமென்று ஒருவரிடத்து இரப்பது இளிவாக விருக்குமானுல், பிற பொருளிரப்பதை என்னென்றுகூறுவது! இதகாலை "இரப்பது இழிவு" என்பதே மறந்துவிட்டது. இரந்துண்பதையே தொழிலாகக்கொண்ட மக்கள் பலர் மல்கிவிட்டனர். எல்லாவற்றிற்கும் இரப்பது; எல்லோரும் இரப்பது; என்ருகி விட்டது. இல்லாதவர் இரப்பதைப் பின்னே பார்த்துக்கொள்ளலாம். பொருளுள்ளபலர் இரப்பதையும்பார்க்கின்றோம். ஏற்பது இகழ்ச்சி என்ற விஷயம் திருக்குறளாதி அருமைத் திருநூல்களிலிருக்கின்றதேயன்றி மக்கள் அநுட்டானத்தில் இம்மியுமில்லை. நமதிந்திய மக்களிற் பலர் ஏற்பதிகழ்ச்சி யென்பதை யுணராமை, தொழிலில் நமது நாடு தாழ்வடைந்த தற்கு ஒரு காரணமென்று கூறலாம். தொழில் செய்யவல்ல பல்லோர், ஒரு தொழிலுமாற்ருது சோம்பித்திரிந்து இரந்துண்டு திண்ணைகளிற் றூங்கிக்காலங் கழிக்கின்றனர். ஊர்கள் தோறும் வீதிகளில் அநேகம் இளைஞர்கள் இரந்துண்பதைப் பார்க்கின்றோம். இளமையிலேயே இரந்துண்டு திண்ணை தூங்கும் தொழிலை மேற்கொண்டால் இவர்கள் வாணுளெல்லாம் வீணேகழிகின்றதன்றோ? அந்தோ! இதனைக்காணும் யார் மனந்தான் வருந்தாது? கிடைத்தற்கரிய மனிதப்பிறவியை இவர்கள் தாங்கியது இரந்து உண்டு உறங்கி இறப்பதற்கோ? அங்ஙனமாயின் தாவரங்கட்கும் இவர்கட்கும் என்ன வேற்றுமை? அரும்பெறல் யாக்கையைப் பெற்றபயனை யடைதல்வேண்டாமோ? (இரவு என்ற ஒரு தொழில் இல்லாதபோனுலும் ஏனையவற்றில் இவர்கள் போன்ற பூமிக்குப்பாரமாகப் பிறந்தோர் பலர் எவ்வகுப்பினும் எவ்வளவு பணம் படைத்தோருள்ளும் உண்டு; அவர்களைச் சமயம் நேர்ந்துழி எடுத்துக்கொள்வோம்) இரப்பவர்க்கு மிக இரங்கி நமது தெய்வத் திருவள்ளுவனுர் மனமுருகுகின்றூர். பிறர் துன்புறப் பெரியார்கள் மனஞ்சகிக்க மாட்டார்களாதலினுலே, பெரியாராகிய வள்ளுவனுர் இரப்பவர்களை யெல்லாம் ஒன்று இரந்து கேட்கின்றூர். "இரப்பனிரப்பாரை யெல்லா மிரப்பிற், கரப்பாரிவரன்மின் றென்று" 'இரப்பாரையெல்லா மிரப்பன்:—இரக்கின்றவரையெல்லாம் நான் ஒன்று இரந்து கேட்கின்றேன்; அது யாது? இரப்பிற் கரப்பார் இரவன்மின் னென்ற:—இரக்கவேண்டுமானுலும்இரப்பதை மறைப்பாரை இரவாதேயுங்கள் என்று என்று வள்ளுவர் கூறுவாரானுல் இரக்கின்றவர் பொருட்டு அப்பெரியார் படும் பரிதாபம் விளங்கவில்லையா? மற்றும் இரக்கின்றவர் பொருட்டுஇரங்கி பிரமாவுக்கும் சாபங்கொடுக்கின்றூர் நமது தேவர். "இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற்

Best copy available

## திரும்பவும் முருக்கமரத்தில் ஏறிக்கொண்டது!

ஐயா பெரியோர்களே!

சிலகாலத்திற்கு முன் விசேஷகாலங்களில் வீணே நிரம்பச் செலவாகிறதென்று அநேகர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதையுணர்ந்த தீவிர அபிமானிகள் சிலர் முற்பட்டு யாருக்கும் உபயோகமில்லாமல் கஷ்டத்தைத்தந்துகொண்டிருந்த சமாச்சாரங்களையெல்லாம் நம் ஜாதியை விட்டு அகற்றிவிட எண்ணி, தனவைசிய ஊழியர் சங்கமூலமாகப் பலமான பிரசாரம் ஊரூராகச் சென்று செய்தார்கள். நல்ல காரியமென்று எண்ணித்தான் ஒவ்வொரு ஊரிலும் நகரத்தார்கள் கூடித்தீர்மானஞ்செய்து எழுதி வைத்தார்கள். முதன் முதலில் தீர்மானஞ்செய்தவர்கள், அத்தீர்மானங்களை ஒரு தனிக்கடுதாசியில் அச்சடித்துப் புள்ளி தவறாமல் ஒவ்வொன்று கொடுத்தார்கள். அதைச் சிலர் கண்ணாடிகூடப்போட்டு ஆணியடித்துத் தூக்கி வைத்தார்கள். அதன் பின்னர் வழுவழுப்பான கடுதாசியில் அழகான புஸ்தகரூபமாக அச்சடித்துப் புள்ளிதவறாமல் வழங்கினார்கள். எல்லாம் தடபுடலாகவிருந்தது சில நாள் எங்குசென்றாலும் ஜாதீயத்தீர்மானப் பேச்சாகக் கிடந்தது. ஆடவர்களுக்கும் பெண்மணிகளுக்கும் சௌகரியமாகவும் சந்தோஷமாகவுமிருந்தது. மிக மிகக் கொஞ்ச எண்ணுள்ள சில ஆண்பெண் பிதற்றிக் கொண்டிருந்தாலும் வெளியே சொல்ல வெட்கப்பட்டுக்கிடந்தார்கள். செலவு மிச்சமாகவும் நிரம்ப வேலைத் தொந்தரவில்லாமலும் இருந்தது. பெரும்பாலும் எல்லாவூர்களிலும் தீர்மானத்தை அநுசரித்தே நடைபெற்று வந்தது. தீர்மானம் செய்யப்பெறாதிருந்த இரண்டொரு ஊர்களுக்குத் தீர்மானஞ்செய்த ஊரார் சென்றால் அதுகூடாது இது கூடாது இப்படித்தான் செய்யவேண்டுமென்று சொல்ல, கிளர்ச்சியாகவிருந்தது. ஐயா! சொ[illegible]ணூற்றூர்க் கூட்டத்தைச் சிலர் சம்பூரணம் செய்து விட்ட பின்னர் பழயகருப்பனே கருப்பன் என்ற பழமொழிக்கு இலக்காகிவிட்டது. இது போழ்து கட்டுப்பாடு இதிலும் இருக்கக்கூடாது என்பது அநேகரின் கருத்தாகிவிட்டது. கறி உ0- கறிவகை வைக்கிறார்கள் இலையில் பல தொன்னைகள் அடுக்கப்பெறுகின்றன. தங்கரேக்குத்தாளைக் கையில் எடுத்துக்கொண்டு வயிரமோதிரமும் சவுவைவேட்டியும் பட்டுச் சட்டையும் தரித்த ஒருவர் மூக்கைத்துளைக்கும் நெய் போடப்பட்டிருக்கும் சாதத்திற்பரிமாறுகிறார். பலகாரம் பத்துவகை செய்து துன்பப்படுகிறார்கள் சிலர் வயிற்றை விசேஷக்கார வீட்டில் தடவ ஆரம்பித்து விடுகிறார்கள். முச்சந்தியில் பலகாரம் விற்க நம் பெண்கள் வந்துவிட்டார்கள். சில காலம் ஓய்ந்திருந்த பாட்டுக்கச்சேரி பியாண்டுக்குப்பணம் போக ஆரம்பித்து விட்டது. விக்ரமாதித்தன் கதையை எல்லோரும் அறிவார்கள். வேதாளத்தைமுருக்கமரத்திலிருந்துபிடித்துப் பிடித்து வந்து கட்டிவைத்தார்கள், அது திரும்பவும் திரும்பவும் ஓடி முருக்கமரத்திற்கு ஓடி ஏறிக்கொண்டதுபோல் இத்தீர்மானங்களும் ஆயது. இதைப்பற்றி யாருக்காவது கவலையிருக்கிறதா? கல்யாண விஷயந்தான் கரை கடந்து விட்டது. இதையுமா தொலைக்கவேண்டும்! வீராவேசத்துடன் தீர்மானத்தை ஆதரித்தவர்களெல்லாம் இன்றுஎங்கு நக்கிறார்கள்? முன் செய்த பாவம் வந்து கழுத்தைப்பிடித்துத் தள்ளும்போது யாரைநொந்து என்ன பயன்?

அறியாமைக்கு ஏங்குவோன்

---

## தொற்றுநோய்,

தொற்றுநோய்கள் இத் தேசத்தில் மிகுதி. அதற்குக் காரணம் சரியானபடி சுகாதார முறைகளைக் கைக் கொள்ளாமையே. சுகாதார முறைகளை அனுட்டிப்பதற்குத் தக்க கல்வியறிவும் வேண்டிய சௌகரியங்களும் பெரும்பாலருக்கு இருப்பதில்லை. கல்வியறிவும், சௌகரியங்களும் உள்ளவர்களாவது சுகாதாரவிதிகளைச் சரிவரக் கையாளுகிறார்களோ என்றால் அதுவுமில்லை. அலட்சியமாக இருந்து விடுகிறார்கள். நோய் வியாபித்துப் பலத்த பின் ஆதியில்கவனிக்காததுகுற்றமென்று மனம் வருந்துவது உண்டென்றாலும் வியாதி சுகமானதும் அதை மறந்து விடுகின்றனர். அந்தோ! இது பேதமையிலும் பேதமையே ஆகும். தொற்றுநோய் விஷத்துக்குச் சமமானது. பசுவின் பாலில் ஒருதுளி உப்புக் கலந்தால் எப்படிக் கெட்டுவிடுமோ அதே போல தேகத்திலுள்ள நல்ல இரத்தத்திலும் தொற்று நோய் விஷம் கலந்து விட்டால் அது இரத்தம் முழுவதையும் கெடுத்து ஆரோக்கியத்தை அழித்து விடுகிறது.

அம்மை, விஷபேதி, பிளேக், விஷசுரம், குன்மம், க்ஷயம் முதலியன நமதுநாட்டில் சாதாரணமாக நடமாடும் தொற்று நோய்கள். திருவண்ணாமலைத் திருக்கார்த்திகை முதலிய தீர்த்த ஸ்தலங்களில் தொற்று நோய் பரவியதால் வழக்கம் போல பக்தர்கள் அங்கு செல்ல முடியாமற் போய் விட்டது. தொற்றுநோய் இருப்பதால் ஜனங்கள் ஏராளமாய் வந்து கூடுவது அபாயகரமானதென்று அவ்விடத்திய முனிசிப்பாலிட்டியார் விளம்பரம் செய்திருந்தனர். ஆகையால் பக்தர்கள் கூட்டம் அங்கு செல்லவில்லை. அதற்குக் காரணம் பயமன்றோ? பயமெனில் மரணபயமாகும். அந்த இடங்களில் தெய்வ கருணை பலமாக இருப்பதாய் நினைக்கவும் கூடவில்லை. தெய்வமும் காலத்தைக் கருதிப் பயப்படுவது போலிருக்கிறது. அந்த இடத்தில் தெய்வ சக்தியை விட மெய்யற்சியே பெரிதாய் ஏற்படுகிறது. முயற்சி செய்ய வேண்டியவர்கள் மனிதர்களை தவிர, தெய்வமல்ல. "தெய்வகாணுவகருமேயனு" என்ற பெரியார் வாக்குப்படி மனிதருப்மாயிருந்து சாதிக்கத்தெய்வம் சாதகமாயிருக்கிறது. நெருப்புப்பற்றியெரியும் ஓர் வீட்டைப்பார்த்துத்தெய்வம் நெருப்பை அமர்த்தி விடுமென்று எண்ணி வெறுமனே யிருக்கலாமா? அதேபோல விஷநோய் வியாபித்துள்ள இடத்தில் அவ்விஷநோயை விலக்க நகரங்களையும், நமது வீடு பண்டங்களையும், உடம்பையும் சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். ஆரம்பத்தில் அற்பமாய்க் காணப்படுகிற ஒரு நோய் கவனிக்காவிட்டால் பின்பு பிராண ஆபத்தாய் முடியும். சுகாதாரவிதிகளைக் கவனிக்காதவர் வைத்தியர்களுக்கு அடிமையாக வேண்டியது தான். பட்டினங்களிலே சுகாதாரத்தைப் பரிபாலிப்பதற்காக நகரபரிபாலன சங்கங்கள் அதாவது முனிசிப்பாலிட்டிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவற்றில் ஜனப் பிரதிநிதிகளாக இடம் பெறுபவர்கள் சாதாரணமாகத் தங்கள் கடமையை உணராதவர்களும், தொல்லையில்லாமல் கவரவம் சம்பாதிக்க விரும்புகிறவர்களுமாயிருப்பதால் நகர சுகாதாரம் மிகவும் கேவல நிலைமையில் இருப்பதைப் பல இடங்களிலும் நாம் காண்கிறோம். பொது ஜனங்கள் கண்விழித்துக் கொண்டு முயற்சித்தால்தான் இவ் விஷயத்திலும் திருத்தம் ஏற்படும்.

சு. பழநியப்பா.

---

பாந்து கெடுக வுலகியற்றியான்" "உலகியற்றி யானாகிய அயன், இவ்வுலகின்கண் வாழ்வார்க்கு முயன்று உயிர்வாழ்தலையன்றி இரந்தும் உயிர்வாழ்தலை விதித்தானாயின் அக்கொடியோன்றானும் அவரைப் போன்ற எங்கும் அலமந்து கெடுவானாக" என ஆசிரியர் பரிமேலழகர் வரைகின்றார். இதுகாலை அதனையாரே உணர்கின்றனர். வீடுதவறாது சென்று, அவர்கொடுப்பவராயினும் சரி; வந்தவரை எவ்வளவுவரை அவமானப்படுத்த முடியுமோ, அவ்வளவு அவமானப்படுத்தக் கூடியவராயினும் சரி, பல்லைக்காட்டுதற்கும் பின்வாங்காத ஒரு கூட்டத்தாருமிருக்கின்றனர். இவ்விராவின் இழிவைப் பற்றி நள வெண்பாவிற் கூறப்பட்ட ஒரு செய்யுளை எடுத்தந்து இக்கட்டுரையை முடிக்கின்றேன். "சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வற்பாற் சென்றீ, எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய, தானந்துடைத்துத் தருமத்தை வேர்ப்பறித்து, மானந் துடைப்பதோர் வாழ்வு"



# குலமகட்கு விலைகொடுப்பதோ?

அந்தோ!

மாக்களையன்றோ விலைக்குவாங்குவது!

## மனைவியை விலைக்குவாங்கலாமா?

கொடுந்தொழில்! கொடுந்தொழில்!

## வேண்டாம்! வேண்டாம்!!

விலைகொடுத்து வாங்குதல் வேண்டாம்!

நமது பண்டை முறையை அநுசரிப்போம்.

## கட்டழகுவாய்ந்த கன்னியருண்டு!

காலத்தை வீணே கடத்தல்வேண்டாம்!!

தாமதமின்றி வாருங்கள்!

## பேரானந்தமடைவீர்கள்!

இன்பவாழ்க்கை வாழலாம்.

## இன்றே திருமணம்!

## எதற்கும் யோஜிக்க வேண்டாம்!!

தனவைசிய ஊழியர் சங்கத்தார்.

காரைக்குடி.



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி ஆவணிமூ உகஉ

## முயற்சியும், பயனும்.

முயற்சியென்பது மக்கள்செய்யும் வினையாகும். பயன் என்பது அதனாலேற்படும் பிரயோஜனம். மக்கட்கும் வினைக்கும் தொடர்பேயன்றி மக்கட்கும் பயனுக்கும் தொடர்பு இம்மியுமில்லை. இதனையறிந்தோரே அறிஞர். எவ்வினைக்கும் பயன்கொடுப்பவர் கடவுள். இறையருளன்றி எப்பயனையும் லவலேசமும் அடைய எவர்க்கும் கூடாதென்பது அறிஞர் கண்ட உண்மை. ஆனல், மக்கள் முயற்சியில் சிறிதும் பின்னடைதல் ஆகாது. பயனைப்பற்றிக் கவலுதல் அநாவசியம். மக்கட்கு முயற்சிசெய்தல் கடனன்றி, பயன் விரும்பல் கடனன்று! நாம் செய்யும் காரியத்தால் இப்பயன் விளையும் என்ற ஆணவம் மேலிட்டு விடுமானல் அப்பயனை அடைதல் சிரம சாத்யமேயாகும். "நமது கடமையை நாம் செய்து கொண்டு செல்வோம். ஆவது ஆக!" என்ற துணிவுகொண்டு முயற்சியில் இறையுந் தாழாது இயற்றின் எண்ணிய எண்ணியாங்கெய்துப வென்பது திண்ணம்.

'பொதுஜன ஊழியத்திற் றலைப்பட்டோர்க்கு இந்தஞானம் கைவரப்பெற்றலன்றி அவர் எவ்வினையுஞ்செய்யும் ஆற்றலிலராகி ஏங்கியழிவரென்பது திண்ணம். நாம் செய்யவேண்டுவது முயற்சியே தவிர அது ஆகவில்லையே இது ஆகவில்லையேயென்று வருந்த நமக்கு உரிமையேது? அங்ஙனம் வருந்துவதில் யாதுபயன்? அச்செயல் நமதுமுயற்சியைப்பெரிதும் அழிக்கும் ஓர் கொடிய ஆயுதமாகும். திருவினையாக்கும் முயற்சியை வேரோடு பறிக்கும் பயனின்மை கண்டுபரிதபித்தலாகிய ஆயுதத்தை அறிஞர்கையிலெடுக்க மாட்டார். ஏன் வருந்துதல் வேண்டும்? ஆவதுதானே யாகும். அயன் விதித்ததை மாற்ற வல்லவர் யாவர்? அவன் ஆட்டுவித்தா லாரொருவராடாதார்? அவனன்றி யோரணுவும் அசையுமோ? ஆனல் முயற்சியில் மனிதப் பிரயத்தனத்தினல் எவ்வளவு செய்யமுடியுமோ அவ்வளவும் செய்தல் வேண்டும். அதிற் பின்வாங்கின் ஏதுவும் கைகூடாது. நமது வினையை நாம் செய்துகொண்டு சென்றால் ஆங்காலம் வரும் பொழுது ஒவ்வொன்றும் முடிந்துகொண்டே செல்லும். ஒருவினையிலிறங்கும் பொழுது அது எத்தனைதடவைகள் கைகூடாதொழியினும் அவ்வினையை விட்டுவிடுதல் மட்டினும்படாது. எடுத்தகாரியம் நூறு முறை தவறினும் அதற்காக விட்டு விடுதல் ஆகாது. மேலும் மேலும் ஊக்கமாகச்செய்து கொண்டே செல்லுதல் வேண்டும். அதுநற்காரியமாக விருக்குமானல் நிச்சயமாக ஒரு காலத்தில் கைகூடும். வருந்தினல் வாராததொன்றில்லை. உடனே பயனையெதிர்பார்த்தல் அறியாமை! திருவருள் கூட்டிவைக்கும் பொழுது முற்றுப்பெறும். நல்வினையென்று நமக்குத் தோன்றுமானல் பயன்கருதாது அதனை ஆயுள் பரியந்தம் விடாது ஆற்றவேண்டுவதே நமது கடன். இப்பிறப்பில் அது கூடவில்லையாயினும் வரும்பிறப்புக்களிலேனும் அது கூடும் என்பது ஒருதலை. ஆகவே மக்கட்கும் முயற்சிக்குந்தான் சம்பந்தமேயன்றி, மக்கட்கும் பயனுக்கும் சம்பந்தமில்லை யென்பதை முதலில் உணர்தல் வேண்டும். அதனையுணர்ந்தோர் செய்யும் முயற்சியே முட்டின்றிச்செல்லும். முயற்சியைத்தடுப்பது எதுவாயினும் அதனைப் பொருட் படுத்துதல் ஆகாது. தீவிர முயற்சியுடையார்க்குப் பலமுட்டுகள் வருவது உலகவியற்கை. அந்தகாரம் நிறைந்த உலகம் நல்லதுகெட்டது அறியாமலே பேசும்; பொதுஜன முயற்சியுடையாரைத்தூற்றும்; அவர் போற்றற்குரிய உயரியசெயலைவெறுக்கும்; அவர் முயற்சிக்குப் பலதடை செய்யும்; அவர் முயற்சி பயனற்றதெனப் பறை சாற்றும்; இன்னும் பல செய்யும். இது எத்துறையினும் ஏற்பட்ட இயற்கை. இது இயற்கை என்றே தள்ளித் தங்கருத்தில் நாட்டஞ் செலுத்துவர் பெரியோர்.

இது காலை உலகில் பெரியாராக விளங்கும் மகாத்மாவை எடுத்துக் கொள்வோம். அவர் சுயராஜ்யப் போரில் தலையிட்டார்; ஒத்துழையாமையை ஆரம்பித்தார்; போர் தொடங்கினர்; ஓராண்டிற்குள் தேசத்தை விடுவிப்பதாக எங்கும் முழக்கினர்; அது கூடவில்லை. ஏன்? முயற்சியிற் குறைவோ? இல்லை. காலங்கூட்டவில்லை. ஜனங்கள் அனைவரும் அவர் சொல் வழி நடக்கவில்லை. அதற்காக அவர், அவர் முயற்சியை விட்டனரோ? அவர் தவம் புரிகின்றார்; அது நடந்து கொண்டு வருகின்றது. உலகவியற்கைக்கேற்பச் சிலர் இகழ்கின்றனர்; பலர் புகழ்கின்றனர். இரண்டையும் அவர் விரும்பவில்லை. எதற்கும் அவர் வருந்தவுமில்லை. ஏன்? வருந்தத்தக்க காரியம் எதுவும் அவர் செய்தாரில்லை. பயனுக்கும் தனக்கும் சம்பந்தமில்லையென்பதையுணர்ந்த அறிஞர்குறித்த காலத்திற்றுள் முயற்சி பயன்படாமைக்காக ஏன் வருந்தப் போகின்றனர்?

இதுகாலை மணஞ் செய்தற்கு இவ் வாவணியை முதல்மாதமாகக் கொண்டு ஆவணிமுதல் ஆறு திங்கள்கட்குள் மணஞ் செய்வதாகக் குறித்தனர் நமது சங்கத்தார். குறித்த ஆவணி முடிய இன்னும் ஒருவாரந்தானிருக்கின்றது. இம்மாதமாகிய எழிலார் ஆவணிக்கும் நமது சங்கத்திற்கும் நெருங்கிய சம்பந்தமுண்டாதலால் இம்மாதம் நிச்சயமாக மணத்தைக் காணுமென வெதிர்பார்த்தவர்களிலனேகர் இப்பொழுது இம்மாதம் முடிய இன்னும் ஒரு வாரமேயிருத்தலால் இம்மாதத்தில் மணமியற்றல் சிரம சாத்தியமென வெண்ணுகின்றனர். ஆனல் சங்கத்தார் முயற்சியில்



குறைவில்லை. இதுவரை எந்தக்காரியத்திற்கும் சங்கத்தார் இவ்வளவுமுயற்சியெடுத்துக்கொண்டதில்லை யென்பதை, சங்கத்தாரை நெருங்கிப் பழகியவருணர்வர். இன்றும் நாட்சுருக்கம்கருதி இம்மாதத்தில்முடியாதென வெண்ணிவாளாவிருக்கவில்லை. இன்னும்பற்பலவிடங்களில்இராப்பகலாக ஓய்வின்றி இம்மாதத்தில் எவ்விதத்தும்மணமுடிக்க அரும்முயற்சி செய்துக்கொண்டுதானிருக்கின்றனர் சங்கத்தார். நாட் சுருங்கிவிட்டபோதினும்சங்கத்தாரின் முயற்சியின் திறம் கண்டார் இம்மாதத்தில் நடவாதென்று இப்பொழுதும் கூறத்துணியார். நாம் முன்ன ரெழுதியபடி ஒருமணமேனும் அநேகமாகநடத்திவிடுவர். முயற்சிக்கேற்ப நடப்பதாயின் எத்தனையோ மணம் நடாத்தல் கூடும். இறையருளன்றோ வேண்டும்? இம்மாதத்தில் நடத்தாவிட்டாலும் அதுகொண்டு சங்கத்தார் மனமழிந்து தங்கள் பெருமுயற்சியில் தவறி விடுவார்களென்று அறிஞர் கூறத்துணியார். இம்மாதமாயினும் ஆக! குறித்தபடி ஆறுமாதங்கட்குள் ஆயினும் ஆக! அதற்கும் அதிகமாக ஆயினும் ஆக! அதனைப் பற்றிக் கவலையில்லை. முயற்சியில் சிறிதுந் தாழாதுழைற்றுவரென்பதிலையமில்லை. திருவருட் செயல் ஆமாறு நடக்கும். எதுகொண்டும் தங்கள் முயற்சியிற் பின்வாங்கமாட்டார்கள். பயனுக்கும் தங்கட்கும் சம்பந்தமில்லையென்பதையும்முயற்சியே தங்கட்குரிய தென்பதையும் உணர்ந்தவா சங்கத்தாரென்பது ஏற்கனவே யாவருமறிந்திருக்கலாம். ஆனல் இம்மாதத்தில் மணம் நடக்கலாம் என்ற நம்பிக்கை நமக்கு இன்னும் இருக்கிறதெனினும் நிச்சயமாகச் சொல்தற்கு நாம் பிரமதேவனல்ல. ஒருகால் இம்மாதத்தில் நடவாதொழியினும் நமது பெருமுயற்சி இதுகாலைப் பயன்படாமைக்காக நாம் வருந்தப்போவதில்லை.

## இடி முழக்கம்.

### இவ்வாரப்பத்திரிகை.

நமது ஆசிரியர் திருமண விஷயமாக வேற்றிடங்கட்குச் சென்று இன்றுதான் வந்தமையானும், இதுகாலை உதவியாசிரியரும் இன்மையானும் நமது இவ்வாரப்பத்திரிகை எட்டே பக்கங்களோடு சிறிது தாழ்த்தும் வெளிவந்துளது.

### சம்பாவனை

பனக்கரை திருவாளர் வீர. அ. ச. இராமனுதன் செட்டியாரவர்கள் தமது புதல்வனுக்கு நாளிது திங்கள் கஅஉ நடைபெற்ற காப்புக்கட்டுப்புதுமையை முன்னிட்டு நமது பத்திரிகைக்கு ரூபாய் ஐந்து சம்பாவனை செய்தனுப்பி யுள்ளார்கள். அவர்கட்கு நன்றி செலுத்துகிறோம்.

### ஸ்ரீ திலகர் ஸ்வயராஜ்ய நிதி.

இந்நிதிக்கு "காசாங்" என்ற ஊரிலிருந்து திருவாளர் கண. இராமனுதன் என்பவர்கள் ரூபாய் நூற்றி ஆறரைவசூலித்து பாங் செக் ஒன்று அனுப்பினார்கள். இதனை தமிழ் மாகாணத் தேசீய மகா சபைக் காரியதரிசியாகிய ஈரோடு திருவாளர் ஈ வி. இராமசாமி நாயக்கருக்கு அனுப்பிவிட்டோம்.

### பாபு மதிலால் கோஷ் இவ்வுலகை நீத்தார்.

கல்கத்தாவில் நடைபெறும்சிறந்த பத்திரிகையான அமிர்தபஜார் பத்திரிகையின் ஆசிரியரான பழம் பெரும் தேசாபிமானி பாபு மதிலால் கோஷ் இம்மாதம் இருபதாம் நாள் இவ்வுலகை நீத்தார். இவர் தமது எஎ-வது வயதில் விண்ணுலகெய்தியிருக்கின்றார். இவ்வறிஞரின் தேசாபிமானம் நம்மால் அளவிட்டுரைக்கும் தகைமைத் தன்று! கேவலம் மனிதயாக்கைபெற்றும் நடைப்பிணங்களாக உலவுவோர் நீண்ட காலம் பயனின்றி வாழ்வதைக்காட்டினும், இவர் போன்றவர் எழுபத்தேழு வயதல்ல, எவ்வளவு காலம் உலவினும் பெருத்த நலன்விளையுமன்றோ? இவர் பிரிவுக்கு வருந்துகிறோம்.

## உள்ளூர்ச் செய்தி.

### ஹிந்துமதாபிமான சங்கம். மகாசபை.

நாளைச் சனிக்கிழமை மாலை ௫ மணி முதல் எ மணி வரை நடைபெறும். இச்சங்க மகா சபைக்கு இச்சங்கத்தின் உள்ளூர் வெளியூர் அங்கத்தினர்களின் வரவு பெரிதும் எதிர்பார்க்கப் பெறுகிறது. முன்கூடிய கூட்டத்திற்குப் போதிய அங்கத்தினர் வாராததால் இக்கூட்டம் இரண்டாம் முறையாகக் கூடும் கூட்டமாகும்.

### ஆண்டு விழா.

இச்சங்கத்தின் ஐந்தாம் ஆண்டு நிறைவு விழா நாளிது ஆவணிமீ ௩கஉ நடைபெறுகிறது. அதற்கு திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் மு. வேங்கடசாமிநாட்டாரவர்கள் தலைமை வகிப்பார்கள். அவ்வமயம் திரிசிரபுரம் திருவாளர் எம். எஸ். நடேசய்யாரவர்கள் "ஆர்ய தர்மத்தின் தற்கால நிலை" என்ற விஷயத்தையும், கோயம்புத்தூர் தமிழ்ப் பண்டிதர், திருவாளர் அ. கிருஷ்ணசாமிநாயுடு அவர்கள் "மக்கள்யார்" என்ற விஷயத்தையும் திருநெல்வேலி திருவாளர் பி. எஸ். ஆச்சாரியாரவர்கள் "பாரதியார் பாடல்" என்ற விஷயத்தையும், திருப்பாதிரிப்புலியூர் பண்டிதை அசலாம்பிகையம்மாள் அவர்கள் "இந்துமாதர்கள்" என்ற விஷயத்தையும், சொற்பெருக்கிடுவார்கள் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

## தந்திச் செய்தி.

பினங்கு ஆவணிமீ உஉஉ

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்றெழுபத்தேழு |
| ஈயம் விலை | எழுபத்தொன்பது |
| ரப்பர் விலை | முப்பது |

ரேங்கூன் ஆவணிமீ உஉஉ

| | |
|---|---|
| உளுந்து | [illegible] |
| கடலை | [illegible] |
| துவரை | [illegible] |
| நெல் | [illegible] |
| சிறிய மில் அரிசி | [illegible] |
| பெரிய மில் அரிசி | [illegible] |
| தங்கம் | [illegible] |
| வெள்ளி | [illegible] |
| பவுன்விலை | [illegible]—0—0 |
| உண்டியல் விலை | [illegible] |
| நடப்புவட்டி | 0—[illegible]—[illegible] |
| தவணைவட்டி | 0—[illegible]—[illegible] |

பணம் சவுதம்

## பொதுச்செய்தி.

..ச ஊழியன்:—இப்பெயர் வாய்ந்த ..தேசிய மாதாந்தப் பத்திரிகையை ..னும் ஒரு வர்ரத்தில் திருச்சிஞப் ..ளியிலிருந்து வெளியிடப்படும். இதில் ..திய விஷயங்கள், விவசாயம், கைத்தொ.., பெரியோர்களின் சரித்திரம் முத.. விஷயங்கள் எழுதப்படும். இதற்கு ..ட சந்தா ரூபாய் இரண்டு வைக்கப்பெ.. என்று ஒருவர் அறிவிக்கிருர்.

***

காரைச்சிவனடியார் திருக்கூட்டம்:—..ளிதுமீ காலை ஏ-மணிமுதல் ௯-வ..ரை நகரச்சிவன்கோவிலில் விநாயகர்சது..த்தியை முன்னிட்டு, திருவாளர்களான அரு. சோமசுந்தரஞ்செட்டியார், அள. காளையப்ப செட்டியார், சேவு. மெய்யப்ப செட்டியார், சொ. முருகப்ப செடடியார், முதலிய சிவனடியார்கள் விநாயகர் பிரபா வத்தைப்பற்றிச் சொற்பொழிவு செய் தார்கள் என்று உதவிக்காரியதரிசி மு. அருணசலம் செட்டியார் அறிவிக்கிருர்.

***

விவேகாநந்த பாட்மிண்டன் கிளப்:- இப்பெயர் தாங்கிய பாட்மிண்டன் கிளப் இவ்வூர் வாசகசாலையின் அங்கத்தினர் களால் கடந்த வைகாசிமீ ௧௦உ-யில் நிறு வப்பெற்றுக் குன்ருஊக்கத்தோடு காலை, மாலை, இருநேரங்களிலும் தவருது முறையே நடைபெற்றுவருகின்றது. சுகா தாரத்திற்கு இந்தப் பந்தடி இன்றியமை யாததாயிருப்பதால் இப்பொழுது இரு ந்துவரும் ஊக்கம் என்றும் இருக்க இறை வனருள் புரிவாரென நம்புகிறேன் எனக் காப்டன் ராம. காசிவிஸ்வநாதன் எழுது கிருர்.

***

ஷண்முகநாத பட்டணம்:—நாளிதுமீ ௪௬உ மாலை ௪. மணிக்கு இவ்வூர் பால சுப்பிரமணியர் சங்கத்தின் சார்பில் திரு வாளர், காரைச் சிவனடியார் திருக்கூட் டத்தலைவர் சொ. முருகப்பசெட்டியாரவர் கள் தலைமையில் சிவனடியார் திருக்கூட் டத்து அங்கத்தினர்களான சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரும், அரு. சோமசுந் தரஞ்செட்டியாரும்முறையே "திருநாவுக் கரசர் சரித்திரம், உணவு" என்னும் விஷ யங்களையும் கரு. வெங்கிடாசலஞ் செட்டி யார்"கல்வி" என்னும்விஷயத்தையும் மிக உருக்கமாகப் பேசினர்கள். சுமார் ௩௦௦ ஜனங்கள் குழுமி இருந்தார்கள் என்று ஒரு நிருபர் அறிவிக்கிருர்.

***

செவ்வூர்:—இவ்வூரின்கண் திருநாவுக் கரசர் வாசகசாலையென்று சென்ற ஆ பங்குனிமீ உ௬உ யன்று வாலிபர்களால் ஸ்தாபனம் செய்யப்பெற்று ஐந்தாறு மா தங்களாக நன்கு நடைபெற்று வந்தது. தற்பொழுது இவ்வூரிலிருக்கும் இரண் டொருவர் தினம் காலை மாலைகளில்வாசக சாலைக்குவந்து அங்குள்ளவர்களிடம் பத் திரிகை புததகங்கள் ஏன்வருத்துகிறீர்கள்? காசைக்கரியாக்காமல் சீனிவெடியை வா ங்கிச் சுடுவது தான் நலமென்று சொல்லு கிருர்கள். இவர்கள் ஏன் இப்படி நல்ல காரியங்கட்கு இடையூறு செய்தல் வேண் டும்? இவர்கள் உள்ளத்தில் இறைவன் பகுந்து இவர்கட்கு நல்ல புத்தியைக்கொ டுப்பாராக என்று ஒரு நிருபர் எழுது கிருர்.

***

ஆவினிப்பட்டி:—இவ்வூர் ஸ்ரீ மீனும் பிகா வாசகசாலையில் ஆவணித் திங்கள் பதிஞும் நாள் பிற்பகல் மூன்று மணி க்கு ஸ்ரீமான் முரு. மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் திரு வாளர்களான பெ.பெரி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் "கோபம்"என்ற விஷ யத்தையும், ஆ. ஆ. சோமசுந்தரம் செட்டி யாரவர்கள். "ஒற்றுமை" என்றவிஷயத் தையும், தெ. கரு. பெரிய கருப்பன்செட் டியாரவர்கள் " கடவுள் " என்ற விஷயத் தையும்,மாணவன் கரு. பெரி. மாணிக்கம் செட்டியார் " தருமம் " என்ற விஷயத் தையும் உபந்நியசித்தார்கள். அக்கிராசன ரவர்கள் முடிவுறை கூற மாலை ரு-மணிக் குச் சபை இனிது நிறை வேறியதென்று காரியதரிசி கரு. பெரி. விஸ்வநாதன் செ ட்டியார் எழுதுகிருர்.

***

புதுவயல் தேகஷீணமூர்த்தி சங்கம்:- இம்மாதம் ௧௯உ யன்று மாலை நான்கு மணிக்கு ஐந்தாவது மாதக்கூட்டம் பங்க ளாப்பள்ளிக்கூடத்தில் பிர்ம்மஸ்ரீ ஆர். மீனுக்ஷிசுந்தரமையர் அவர்கள் தலைமை யில் பிர்ம்மஸ்ரீ காட்டுப்புத்தூர் கிருஷ்ண. சாஸ்திரி அவர்கள் "விருக்ஷமும் உயிருள் ளன" என்னும்விஷயத்தையும் பிர்ம்மஸ்ரீ சுப்பிரமண்ய சாஸ்திரி அவர்கள் "பொ றுமை" என்னும் விஷயத்தையும் ஸ்ரீமாந் நா. அ. ச. ஷண்முகஞ்செட்டியாரவர்கள் "குங்கிலியக்கலைய நாயனர்" சரித்திரத்தை பக்தி ரஸத்தோடும் பல மேற்கோள்க ளோடும் கேட்போருள்ளம் பரவசமடை யும்படி பேசினர்கள். பிறகு பங்களாப் பள்ளிக்கூடத்து மாணவ மாணவிகள் பல விஷயத்தைப் பேசியபின்னர் தலைவர் தக் கமுடிவுரை கூறியபின் இரவு அ-மணிக் குச் சந்தன தாம்பூலாதிகளுடன் இனிது நிறைவெய்தியது என்று உபகாரியதரிசி அறிவிக்கின்றர்.

***

கோப்பநூபட்டி:— ஆவணிமீ ௧௫உ பன்னேரம் ௩ மணிக்கு வாசகசாலையின் கூட்டம் ஸ்ரீமான். குமு. முத்துக் கருப்பன் செட்டியார் தலைமையில் கூடி, மோ. சின்னையா தேசிகர் கடவுள்வாழ்த்து க்கூறிய பின்னர் தலைவர் முகவுரை யும், ராம. காசிவிஸ்வநாதச் செட்டியார் "பக்தி" என்ற விஷயமும், பெரி. இல க்குமணச் செட்டியார் "குங்குலியக்கலய நாயனர் சரித்திரமும்" ராம. நடராஜன் செட்டியார் "பத்த்ராய்ப் பணிவார் சரித் திரமும்" நா. மு. இராமனுதச்செட்டியார் "பரோபகாரம்" என்றவிஷயமும் மு. திரு ப்பதி(மாணவன்)"ஜீவகாருண்யம்"என்ற விஷயமும் நா. மு. நாகப்பன்(மாணவன்) "தருமம்"என்றவிஷயமும் அழகாய்ச்சொ ற்பெருக்கிடத் தலைவர் முடிவுரையோடும் ௬உ-மணிக்கு நிறைவுற்றது. பின் இவ்வா சகசாலை அங்கத்தினர்களில் சிலர் இம்மதி யில்அன்னியநாடு செல்வதைக் கருதித் "தேவலோக இலங்காதகன கிரிமினல் கேஸ்" என்ற சம்பாஷணையை ௫-௩௫முதல் ௯-௩௦வரை நடாத்திக்காண் பித்தும், இரவு ௧௦ மணிமுதல் சிவ பஜனையை இசைக்கருவிகளோடு இனிய தொனியோடும் செய்யச் சந்தன தாம்பூல வினியோகம்வழங்கப்பெற்று ஒருமணிக்கு நிறைவேறியது. அன்பர்கள் நிறைந்திருந் தது பாராட்டத்தக்கது என்று உபகாரிய தரிசி ராம. காசிவிஸ்வநாதன் எழுது கிருர்.

***

கிள்ளான் தனவைசியர் சங்கம்:— இன்று காலை எ-௩௦ மணிக்கு கோலாலம் பூர் ஸ்ரீமாந். கவீ. அழ. முத்தய்யா செட் டியாரவர்களால் இச்சங்கத் திறப்புவிழாக் கொண்டாடப்பெற்றது. இச்சங்கத்திற்கு பொதுக்கூட்டத்தாரால் நிர்வாக சபைக்கு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டி ருக்கின்றனர்.

அன்று கிள்ளான் தனவைசியர் சங்கச் சார்பில் காலை அ-மணிக்கு ஈப்போ தன வைசியர் சங்க அக்ராசனுதிபதி ஸ்ரீமாந் சா. வெ. ராம. செட்டியப்பசெட்டியாரவர் கள் தலைமையில் சிரஞ்சீவிகளான ஆ. முத்துராமன் "நட்பு" என்றவிஷயத் தையும், கரு. ஆவிடையப்பன் "புலான் மறுத்தல்" என்றவிஷயத்தையும் கா சடையப்பன் 'செட்டியார்" என்ற விஷ யத்தையும், சோம. நாச்சியப்பன் "சங் கம்" என்றவிஷயத்தையும்சி. ந.வீரப்பன் "தர்மம்"என்றவிஷயத்தையும், மு. பழ நியப்பன் "கோபம்" என்ற விஷயத்தை யும், அழ. இராமசாமி "கல்வி" என்ற விஷயத்தையும் வெகு இனிமையாகப்பிர சங்கமாறி பொழிந்தார்கள்.

அக்ராசன ரவர்களால் முடிவுரைகூறப் பெற்று சபை ௧௦-௩௦ மணிக்கு இனிது நிறைவெய்தியது. நமது சங்கத்து அக்ரா சனுதிபதியாகிய ஸ்ரீமாந் மு.ராம.இராமன் செட்டியாரவர்கள் சிறந்த ஊக்கத்தோடும் அபிமானத்தோடும் தமது பதவியை ஏற் றுக்கொண்டது நமது சங்கத்தின் அபிவிர்த்திக்கு ஓர் அறிகுறியேயாகும் என்று காரியதரிசி அழ. இராமசாமிஎழுது கிருர்.



## இனிய சொற்கள்.

செல்வத்திற் சிறந்த தனவைசிய சீமான்களே! சீமாட்டிகளே!!

இனிய சொற்கள் நீதியையும் தரு மத்தையும் தரும். நாம் பிறரிடம் அன்புகலந்த இனிய சொற்களைப் பேசுதலையே பழகுதல் வேண்டும். ஒருவனுக்கு நாம் அவன் மன மகி ழக் கோடி திரவியத்தைக் கொடுத் தலினும் அவனைக் கண்டதும் முக மலர்ச்சியுடன் இனிய சொற்களால் உபசரித்தல் மிகவும் மேன்மை யுடையதாகும். இன்சொல்லுடை யோனை உலகத்தவர் நட்புக்கொண்டு அவனுக்கு ஆகவேண்டிய பலவற் றையும் அன்புடன் செய்வர். அத ஞல் அவன் இம்மையிலும் மறுமை யிலும் பெரும் புகழ்கொண்டு வாழ் வான். அவ்வின்சொல், தன்னை உடை யானுக்குப் பெருந்துணையாக நின்று அவனை உயர் நிலையில் அமரச் செய் யும். பண்டைக்காலத்தில் அஸ்தின புரத்தை ஆட்சிசெய்து வந்த துரி யோதனன் வன்சொற் பேசும் வழக் கினனுகையால் மஹா தீரர்களாயும் வீரராயும் இருந்த தன் வீரர்கள் அனைவரையும் பகைத்துக் கொண் டது மல்லாமல் தன் சுற்றத்துடன் மாண்டு மண்ணுயினன். இன்சொல் லையே உயர் வெனக் கொண்ட தரு மன் பரமகிருபாநிதியாகிய கிருஷ் ணனையே தன் உயிர்த்துணையாகக் கொண்டு பலரும் தனக்கு உதவி செய்ய வெற்றிகொண்டு பலநாள் சக்ரேஸ்வரனுக இருந்து உலகை யாண்டு கடைசியில் தன் தம்பி மாருடன் சுவர்க்க லோகத்தில் அமர னய் வாழ்தல் உற்றுன். சகோதரர் களே! அரசற்கே இக்கதியானல் நம்மை யொத்த மனிதற்கு எக்க தியாகும்? இக்காலத்து மக்கள் ஓர் சிலர் வன்சொற் பேசுதலையேவிர தமாகக் கொண்டுள்ளார்கள். வறிய ராய் வந்து இரந்தவரை வாய்க்கு வந்தவாறெல்லாம் திட்டித் துரத்தி விடுகிறதைப் பார்க்கிலும் இனிய சொற்களால் அவ்வறியோரை உபச ரித்தனுப்புதல் மிகவும் மேலானது. அதுபற்றியே திருவள்ளுவர்:—

"நயனீன்று நன்றி பயக்கும் பய னீன்று, 'பண்பிற் றலைப் பிரயாச் சொல்" என்ற குறளை யியற்றியுள் ளார். ஒருவர் மன நோவப் பேசு தல் அருளற்ற கொடியரின் குணமா கும். ஆதலின் நாம் எப்போதும் இனிய சொற்களையே பேசி வலிய சொற்களை நாம் வாயினின்றும் வெ ளிவராமல் காத்தல்வேண்டும். எல் லாம் வல்ல இறைவன் காத்து அருள்புரிவாராக.

திருநாவுக்கரசு.

## சைவ சமய சாரம்.

இப் புத்தகம் சென்னை "நவசக்தி" ஆசிரியர் ஸ்ரீமாந் திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரவர்களால் எழுதப்பெற்றுக் காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தாரால் வெளியிடப்பெற்றது. சைவ சமயத்தின் சாரத்தை இனிது விளக்குவது.

புத்தகம் ஒன்றுக்கு விலை அணா ஒன்று. நூற்றுக்கு ரூ. ௫-0-0

இந்தியன் ஸ்டோர்ஸ், காரைக்குடி.

இனும்! இனும்!! இனும்!!!

## இதுவரையில் வெளிவராதது யாவரும் தரிசிக்கத்தக்கது

சுவாமிகளின் திருவுருவங்களுள்ள 20 (Photo Films) போட்டோ பிலிம்ஸ்கள் இனும். இந்த சுவாமிகளை கீழ்கண்ட ஸினேஸ் கோப்பில் தங்களுடைய வீட்டிலேயே தரிசித்துக்கொள்வதற்கு இதுவே தக்கசமயம்.

"ஜர்மன் ஸினேஸ்கோப்" என்னும் நூதனக் கண்காக்ஷி



இந்த ஸினேஸ்கோப் என்னும் கண்காக்ஷியில் இத்துடன் அனுப்பும் அடியிற்கண்ட பிலிம்ஸ்களை வைத்துப்பார்த்தால் பயாஸ் கோப்பில் காணும்படியானவுருவங்களைப் போலவே ஆச்சரியமாகத் தோன்றும். அமெரிக்கா, பாரிஸ், இங்கிலாந்து முதலிய இடங்களில் நடைபெறும் பயாஸ்கோப் கம்பெனியின் நாடகர்கள் நந்தனவனம் முதலிய அநேக விசித்திரங்களை இதில் காணலாம். இந்த ஸினேஸ்கோப்புடன் ஷை ஆக்டுகளமைந்த (Celluloid Films) செல்லுலாய்ட் என்னும் ஓர்வித தந்தக்கலர் பிலிம்ஸ்கள் 50-ம் சேர்த்து அனுப்பப்படும்.

இதன் விலை ரூபா 3—12—0

மேல்கண்ட ஸினேஸ்கோப் வாங்குபவர்களுக்கு ஸ்ரீ விநாயகர், சுப்பிரமணியர், ஈஸ்வரர், நடராஜர், காளியம்மன், சரஸ்வதி, லக்ஷிமி, மார்க்கண்டேயரின் சிவபூஜை, ஈஸ்வரர் கங்கையைத்தரித்தல். அப்பர் சுந்தரர் சம்பந்தர் மாணிக்கவாசகர், மகாவிஷ்ணு திருவருக்குக்காக்ஷி கொடுத்தல். மச்சாவதாரம், கருடவாகனத்துடன் மகாவிஷ்ணு, இரண்ணிய சம்மாரம், விவேகானந்தர், ராதாகிருஷ்ணன், புல்லாங்குழல் கிருஷ்ணன், கிருஷ்ண பிருந்தாவனம், கிருஷ்ணன் கோவர்தனகிரியைத் தாங்குதல், கோபிகா ஸ்திரீகளின் ஜலக்கிரீடை, ஆக 20-ஸெல்லுலாய்ட் பிலிம்ஸ்களை (Cellouid Films) இனமாக அனுப்பப்படும். இந்த ஸ்வாமி பிலிம்ஸ்களில் காணும் காக்ஷியானது நேராக சுவாமிகளை தரிசிப்பதைப் போலவே யிருக்கும்.

வி. பி. தபால் சார்ஜ் வேறு.

(மலாய் ஸ்டேட்ஸ் சிங்கப்பூர் முதலிய நாடுகளுக்கு மொத்தப் பணமும் முன்னதாக அனுப்பினால் பார்சல் அனுப்பப்படும்.)

விலாசம்:— அ. ராஜுபிள்ளை அண்டு பிரதர்.
19, பஜார் ரோட், சூளை, மதராஸ்.

ஜீவகாருண்யரின்.

## மஹா சந்தனாதித்தைலம்.

கடைகளில் விற்கும் போலிமருந்தல்ல. சாஸ்திரோக்தமாய்ச்செய்தது சகல வியாதிகளையும் கண்டித்துத் தேகபலமும் தேக காந்தியும் தரும்.

சீசா க-க்கு ரூ க—அ—0

ஸ்வாமி சங்கரபாரதிகள்,
ஜீவகாருண்ய வைத்தியசாலை.
மந்தித்தோப்பு, கோவில்பட்டி, S.I.R.

## விளம்பரம்.

உண்மை உத்ஸாகம் உறுதிகளை உள்ளது உள்ளபடி ஆசிரியனைப்போல் எடுத்துப் போதிப்பது எது? பத்மநாதன்- சுவீகார புத்திரன்- அர்ச்சுன சந்நியாஸி- லக்ஷிமி விஜயம் எனும் நான்கு அரிய பெரிய சமூக சீர்திருத்த நூல்களே.

| | |
|---|---|
| பத்மநாதன் | ரூ. க—௪—0 |
| சுவீகாரபுத்திரன். | ரூ 0—௧௨—0 |
| அர்ச்சுன சந்நியாஸி | ரூ 0—௧௨—0 |
| லக்ஷிமிவிஜயம் | ரூ. 0—௧0—0 |

கிடைக்குமிடம்— சு. பழனியப்பா.
ராமச்சந்திரபுரம்,
(திருச்சி)

சுதேசி! சுதேசி!!

நீங்கள் உங்கள் தேசத்து சாமான்களை விரும்புகிறீர்களா?

அப்படி விரும்பினால் எங்கே வாங்கலாமென்று கவலைப்படாதீர்கள்.

எங்களிடம் உயர்ந்தபாம்பே பன்னீர்கள் அத்தர்கள், குங்குமப் பூக்கள் குல்கந்துகள் தங்கரேக்குகள் சுதேசிசில்க்குகள் வலைப்பனியன்கள் மில்வேட்டிகள் சட்டைத்துணிகள் ஸ்டேஷனரிசாமான்கள் சுதேசி கடுதாசிகள் பிஸ்கத்துகள் கதர் வேட்டிகள் இன்னும் எல்லாவிதமான சாமான்களும் விலைசாசமாய்க்கிடைக்கும்.

ஸ்ரீமீனாக்ஷி வர்த்தகசாலை.
பள்ளத்தூர்.

## தபால் தந்திமித்திரன்.

இரண்டாம் பதிப்பு
வெளியாகிவிட்டது.

இதில் பர்மா தேசத்தைப் பற்றின வர்த்தக விஷயமாய்த் தெரிந்துகொள்ள வேண்டிய அநேக விஷயங்கள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. படி, நிறை, அளவுகளும், விலைபொருள்களின் காலவரையறையும், ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களும், பினங்கு, சிங்கப்பூர், சிலோன், பர்மா, இந்தியா முதலிய இடங்களிலுள்ள தபால் தந்தி ஆபீஸ்களின் பெயர்களும், நடப்பு வட்டி தவணை வட்டிகளின் விபரங்களும், வேறு சில முக்கிய விஷயங்களும், முதற் பதிப்பைவிட அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன. வர்த்தகர்களுக்கும் ஏனையோர்களுக்கும் இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. சொற்பப் பிரதிகளே தயாராக இருக்கிறபடியால் வேண்டுவோர் உடனே ஆர்டர் அனுப்பிப் பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

இதன் விலை ரூ. 2—0—0.
வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

வைசியநேசன் கம்பெனி
தபால் பெட்டி நெர், 251
57, மெர்ச்சண்ட் வீதி, ரேங்கூன்.

## சந்தா விபரம்.

| | |
|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... | ௫—0— |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷம்ஒன்றுக்கு | ௬—0— |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0—௨— |

## விளம்பர விவரம்.

| | |
|---|---|
| மாதம் க-க்குபத்தி-க-க்கு... | ௨0—0— |
| ஷை அரைப்பத்திக்கு... | ௧௧—0— |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி

ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப்பிரசுரஞ் செய்யப்பெற்றது

